# இலக்கண விளையாட்டு

(முதல் புத்தகம்)




தொகுத்தவர்

**நாக முத்தையா** பி. காம்.

**ஸ்டார் பிரசுரம்**

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி : : சென்னை-5

# இலக்கண விளையாட்டு

விளையாட்டு என்றால் குழந்தைகளுக்கு விருப்பம் அதிகம். படிப்பை மறந்து, ஆகாரத்தை மறந்து விளையாட்டிலேயே ஈடுபட்டிருக்கும் குழந்தைகளை நாம் எங்கும் காணமுடியும். குழந்தைகளுக்கு விளையாட்டில் விருப்பம் அதிகம் இருப்பதைப் போலவே, குழந்தைகளின் விளையாட்டைப் பார்த்து மகிழ்ச்சி கொள்ளுவதில் பெரியவர்களுக்கு விருப்பம் அதிகம் உண்டு.

குழந்தையையும் தெய்வத்தையும் கொண்டாடுகின்ற இடத்திலேதான் குதூகலம் இருக்க முடியும். பிள்ளைப் பாசம் என்பது தெய்வ பாசத்தைவிட நெருக்கமும் அழுத்தமும் கொண்டதாகும்.

குழந்தைகள் இல்லாத வீடு கலகலப்பாக, களிப்பின் இருப்பிடமாக இருக்கமாட்டாது. ஆகவேதான் வயதான முதியவர்கள் குழந்தைகளோடு வாழ விரும்புகிறார்கள். மனஅமைதி காண விரும்பும்போதெல்லாம் குழந்தைகளைத் தேடி ஓடுவது என்ற வழக்கம் மகாத்மா காந்தி அடிகளிட

மும், மகாகவி இரவீந்திரரிடமும் இருந்து வந்ததாக அறிகிறோம்.

அத்தகைய உயர்வுக்கு உரிய குழந்தைகள் உன்னத நெறிகளைப் பின்பற்றி உயர்ந்தனவற்றைச் சிந்தித்து ஒழுக்கமான வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்பதற்காகவே குழந்தைகளுக்குப் பல விளையாட்டுக்களைப் புத்தக வடிவில் தந்து வருகின்றோம்.

குழந்தைகளின் விருப்பத்திற்கும் விழைவிற்கும் பாத்திரமாக விளங்கி வரும் ரேடியோ அண்ணாவின் (திரு. ர. அய்யாசாமி எம்.ஏ.) சொல் விளையாட்டு, கணக்கு விளையாட்டு முதலிய நூல்களை இதுவரை வெளியிட்டுள்ளோம்.

அதுபோலவே, குழந்தைகளின் ஆசைக்குரிய எழுத்தாளரான திரு. நாக முத்தையாவின் இலக்கண விளையாட்டை இப்போது வெளியிட்டுள்ளோம். இதே வரிசையில் ஐந்து புத்தகங்கள் வெளிவர இருக்கின்றன.

மேலும் இலக்கிய விளையாட்டு என்று புதியதொரு புத்தகம் விரைவில் வெளிவர இருக்கிறது.

இனி, விளையாட்டைப் பெரிதும் விரும்பும் குழந்தைகளின் பொழுது போக்குக்குக் கேட்கவா வேண்டும்?

—கண. இராமநாதன்
(ஸ்டார் பிரசுரம்)

## அறிவுள்ள விளையாட்டு

ஆர்வத் தோடு மகிழ்ந்திடவும்
அறிவு பெற்றுத் திகழ்ந்திடவும்
தேர்ந்த வழியை ஆராய்ந்து
தெளியும் புதிய துறைதோறும்
கூர்ந்த இலக்கண இலக்கியத்தில்
குறைகள் இன்றி முன்னேறி
சீர்த்தி காணும் நோக்கோடு
செய்தேன் இந்த நூல்தன்னை!

—நாக முத்தையா

## விளையாட்டுப் புத்தகங்கள்

**சொல் விளையாட்டு**

ஐந்து புத்தகங்கள்

**கணக்கு விளையாட்டு**

ஐந்து புத்தகங்கள்

**இலக்கண விளையாட்டு**

ஐந்து பாகங்கள்

**இலக்கிய விளையாட்டு**

ஐந்து பாகங்கள்

---

ஒவ்வொரு புத்தகமும்

விலை ரூபாய் ஒன்றுதான்

---

# 1. கடிதத்தில் என்ன தவறு?

ஒரு நண்பர் எனக்குக் கடிதம் ஒன்று எழுதி இருந்தார். அதனை அப்படியே கீழே கொடுத்துள்ளேன். அந்தக் கடிதத்தில் பல பிழைகள் உள்ளன. அவற்றைத் திருத்தி எழுதிக் காட்டுங்கள் பார்க்கலாம்.

கடிதம்.

அன்புடையீர்,

நான் நேற்று ஊர் வந்து சேர்ந்தேன். வரும் வழியில் நண்பர் பலரைச் சந்தித்தேன்; மகிழ்ச்சியும் இன்பமும் ஏற்பட்டது. சென்ற இடம் எல்லாம் திருக்குறளைப் பற்றிப் பேசினேன். பெரியதும் சிறியதுமான சாமான்களைப் பலர் பரிசுப் பொருள்களாகத் தந்தனர். ஓர் கூட்டத்தில் முத்தொள்ளாயிரம் பற்றி ஒருவள் நன்ருகப் பேசினள்.

நாளை உன்னை நேரில் சந்திக்கிறேன்.

## 2. அறிவிப்புப் பலகை

ஒரு கடையில் ஒரு பலகையில் கீழே காண்பது போல எழுதிப் போட்டிருந்தார்கள். அதனை எப்படி எப்படி எழுதினால் சரியாக இருக்கும் என்பதை யோசித்துச் சொல்லுங்கள். இலக்கணப் பிழைகள் இல்லாமல் எழுதுவதற்கு இப்பயிற்சி பெரிதும் பயன்படும்.

"பிரதி ஞாயிற்றுக்கிழமைகள் தோறும் விடுமுறை."

## 3. கூட்டி எழுதுக

கீழே தனிச் சொற்கள் சிலவற்றைக் கொடுத்துள்ளேன். அவற்றைச் சேர்த்துச் சேர்த்து எழுத வேண்டும். சேர்த்து எழுதும் போது இலக்கணச் சிறப்புச் சிதைந்துவிடக் கூடாது. எங்கே செய்து பாருங்கள் பார்க்கலாம்.

ஒன்று + ஒன்று
இரண்டு + இரண்டு
மூன்று + மூன்று
நான்கு + நான்கு
ஐந்து + ஐந்து
ஆறு + ஆறு
ஏழு + ஏழு
எட்டு + எட்டு
ஒன்பது + ஒன்பது
பத்து + பத்து
பாதி + பாதி
வேறு + வேறு.

## 4. விளக்கம் தருக.

| | | | |
|---|---|---|---|
| (1) | என்னுடு<br>எங்நாடு | (3) | தன்னலம்<br>தங்நலம் |
| (2) | முங்நாள்<br>முன்னுள் | (4) | என்னுள்<br>எங்நாள் |

மேலே காணும் சொற்கள் ஒரேபொருள் உடையன போலத் தோன்றுகின்றன. ஆனுல் உண்மையில் அப்படி இல்லை. சிறுசிறு வேறு பாடுகள் இருக்கின்றன. அவற்றைச் சிந்தித்துச் சொல்லுங்கள் பார்க்கலாம்.

## 5. பிழைபட்ட வாக்கியங்கள்.

சிறுவன் சிதம்பரத்தின் கட்டுரைப் புத்த கத்தைப் புரட்டிப் பார்க்கும்போது கீழே காணும் பல சொற்றொடர்களைப் பார்த்தேன். அவற்றுள் பிழைகள் நிறைந்த சொற்றொடர்களைப் பிழைகள் நீங்கிய சொற்றொடர்களாக ஆக்கவேண்டும். எங்கே முயற்சி செய்யுங்கள் பார்க்கலாம்.

(1) அறுபது மாணவர்களுக்கு மேல் எட்டாம் வகுப்பில் படிக்கிறார்கள்.

(2) இராமனுக்கு ஒன்று அல்லது இரண்டு எதிரிகள் இருக்கின்றனர்.

(3) எங்கள் பள்ளிக்கூடம் கிழக்கே கோயிலும் மேற்கே வயல்களும் தெற்கே குளமும் வடக்கே தோப்புக் களும் சூழப்பட்டிருக்கிறது.

(4) வாக்காளர்களைப் பற்றியும் வாக் கெடுக்கும் முறைகளையும் பற்றிப் பேச்சாளர் எடுத்துக்கூறினார்.

(5) மூட்டைப் பூச்சிகளால் உண்டாகும் தொல்லைகளைச் சொல்லி முடியாது.

# 6. ஒருமை, பன்மை

ஒருமையில் கூறப்பட்ட சில செய்திகளைப் பன்மையில் எழுதிக் காட்டுங்கள், பார்க்கலாம். ஒருமை, பன்மை வேறுபாடு தெரியாமல் எழுதினுல் அது விகாரமாகத் தோன்றும். எனவே தான் இந்தப் பயிற்சி.

(1) நன்மை உளது

(2) செய்தி வாராது

(3) விடுமுறை இராது

(4) சேவல் கூவியது

(5) குயில் கூவாது

# 7. பன்மையில் பேசுக.

தனிப்பட்ட ஒருவரையோ ஒன்றையோ குறிக்கும் பெயர்கள் சிலவற்றைக் கீழே கொடுத்துள்ளேன். அவற்றின் பன்மைப் பெயர்களைப் பிழையில்லாமல் கூற முடியுமா? எங்கே, முயன்று பாருங்கள்.

| | |
|---|---|
| (1) வீடு | (9) யாது |
| (2) தேனீ | (10) தன் |
| (3) எழுத்து | (11) மற்றது |
| (4) சுவர் | (12) தோழன் |
| (5) தாய் | (13) அண்ணன் |
| (6) தந்தை | (14) பல் |
| (7) மகன் | (15) சிறியது |
| (8) மகள் | (16) உடு |

## 8. ஊரும் பேரும்.

சில ஊர்களின் பெயர்கள் குறுகி உள்ளன. அவற்றை விரித்துக் கூறவேண்டும். முயன்று பாருங்கள்.

| | | | |
|---|---|---|---|
| (1) | குலசை | (9) | கருவை |
| (2) | கோவை | (10) | நெல்லை |
| (3) | தஞ்சை | (11) | நாகை |
| (4) | சோணாடு | (12) | புதுவை |
| (5) | வீரை | (13) | மயிலை |
| (6) | கச்சி | (14) | விருதை |
| (7) | கைலை | (15) | துறைசை |
| (8) | பூவை | (16) | கரந்தை |

# ௯. பிரித்துக் காட்டுக.

கீழே சில கூட்டுச் சொற்களைக் கொடுத்துள்ளேன். தெரிந்தோ, தெரியாமலோ அந்தச் சொற்கள் நமக்குப் பழக்கமாகிவிட்டன. அச் சொற்களின் தெளிவான பொருள்கள் என்ன என்று அறிய, பிரித்துப் பார்த்தால் போதும். இனி நீங்கள் முயற்சி செய்யலாம்.

கற்றூண்

கன்னெஞ்சம்

முட்டாள்

தெண்ணீர்

புன்னுனி

பொற்குடம்

மண்டலம்

எண்ணெய்

மட் சட்டி

# 10. திருத்தம் தேவை.

"நான் வகுப்பின் வலது பக்கம் இருந்தேன். இடதுபக்கம் இராமன் இருந்தான். அவன் சுவற்றில் கிறுக்கிக் கொண்டிருந்தான். அது அருவெறுப்பைத் தந்தது. எல்லோரும் அவனைப் பார்த்துச் சிரித்தனர். சிரிக்கத் துடங்கியதும் அவன் ரொம்ப வெட்கப்பட்டான். முகத்தில் வழிந்த எண்ணையைத் துடைத்துக் கொண்டு வெய்யிலில் பதட்டத்துடன் வீட்டுக்கு ஓடி விட்டான்."

என் நண்பரின் மகன் இந்த மாதிரி ஒரு நிகழ்ச்சியை என் நண்பரிடத்தில் சொல்லி முடித்தான். நான் அவனை அந்த நிகழ்ச்சியை எழுதிக் காட்டும்படி கேட்டுக் கொண்டேன். அவன் எழுதி அனுப்பியதைத்தான் மேலே கொடுத்துள்ளேன். நீங்கள் விரும்பினால் திருத்திக் கொண்டு படிக்கலாம். எப்படித் திருத்துவது?

# 11. ஆகாரம் இல்லை.

கீழே காணும் எழுத்துக்களுடன் ஆகாரம் சேர்க்கப்பட்டால், அவை உயிருள்ள பொருள் களாகத் திகழும். ஆகாரம் இன்மையால் சோர்ந்து கிடக்கும் எழுத்துக்களை உயிருள்ள பிராணி களாக மாற்றலாமா?

டு, ஊ, மை

## 12. பெருமை உண்டு.

உயர்திணை, அஃறிணை என்று தமிழில் இரண்டு பாகுபாடுகள் உண்டு. மனிதன் உயர் திணை, நாய் அஃறிணை. மனிதனோடு நாய் சேர்ந்து நின்றால் நாய்க்கு இலக்கணத்தில் பெருமை கிட்டுகிறது. பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும் என்பது தானே அனுபவ உண்மை.

இராமன் வந்தான்.

அவனோடு நாயும் வந்தது.

இந்த இரண்டு சொற்களையும் ஒன்றாக்கினால் வாக்கியம் எப்படி அமையும்? யோசித்துச் சொல்லுங்கள், பார்க்கலாம்.

கோமதியும் கோழியும்........?

கண்ணனும் காளையும்........?

முயலும் ஆமையும்........?

# 13. புத்தகங்களும் புத்தக ஆசிரியர்களும்

ஓர் ஓவியர் சில புத்தகங்களுக்குத் தலைப் புக்கள் எழுதிக் கொண்டு வந்தார். புத்தகப் பெயர்களும் புத்தக ஆசிரியர்களின் பெயர் களும் தனித் தனியே இருந்தன. அவற்றை அங்கு விளையாடிக் கொண்டிருந்த சிறு பையன் கலைத்துக் கன்னாப்பின்னாவென்று அடுக்கி வைத்து விட்டான். பையன் அடுக்கிவைத்த படியே தலைப்புக்களின் பெயர்களைக் கீழே கொடுத்துள்ளேன். அவற்றை ஒழுங்கு செய்து புத்தகங்களின் பெயர்களையும் அதற்கு நேராகப் புத்தக ஆசியர்களின் பெயர்களையும் எழுதிக் காட்டுங்கள் பார்க்கலாம்.

(1) தொல்காப்பியம்

(2) புறப்பொருள் வெண்பாமாலை

(3) தண்டி

(4) குணவீர பண்டிதர்

(5) யாப்பருங்கலக்காரிகை

(6) தொல்காப்பியர்

(7) நேமிநாதம்

(8) வீரசோழியம்

(9) தண்டி அலங்காரம்

(10) ஐயனரிதன்

(11) புத்தமித்திரன்

(12) அமித சாகரர்

(13) நன்னூல்

(14) சிதம்பரச் செய்யுட் கோவை

(15) பவணந்தி

(16) குமரகுருபரர்

## 14. ஒன்பதுக்குப் பழைய பெயர்?

ஒன்று
இரண்டு
மூன்று
நான்கு
ஐந்து
ஆறு
ஏழு
எட்டு
....
பத்து

ஒன்பது என்பது இடையிலே புகுந்த சொல். தொல்காப்பியர் காலத்துக்கு முந்திய காலத்தில் ஒன்பதுக்குப் பதிலாக ஒரு சொல் வழங்கி வந்தது. அதன் பெயர் என்ன வென்று சொல்லுங்கள், பார்க்கலாம்.

# 15. பெண்ணினப் பெயர்கள் வேண்டும்.

ஒரு பெரிய மண்டபத்தில் விருந்து நடந்தது. அங்கு ஆண்களும் பெண்களும் வந்திருந்தனர். ஆண்களுக்குத் தனியிடமும் பெண்களுக்குத் தனியிடமும் தரப்பட்டிருந்தன. ஆண் இனத்திடையே உட்கார்ந்திருந்தவர் களைக் கீழே குறித்துள்ளேன். ஆண் இனத்திற்கு நேரான பெண் இனச் சொற்களைக் கண்டுபிடிக்க வேண்டும். முயன்று பாருங்கள்.

| | | | |
|---|---|---|---|
| (1) | சீமான் | (9) | இந்திரன் |
| (2) | கொழுந்தன் | (10) | உழவன் |
| (3) | கன்னுன் | (11) | ஒருவன் |
| (4) | கரியன் | (12) | கணக்கன் |
| (5) | கண்ணன் | (13) | கணவன் |
| (6) | ஆடவன் | (14) | செட்டி |
| (7) | அம்மான் | (15) | செவிடன் |
| (8) | அமைச்சன் | (16) | சிவன் |

## 16. மரபுக்கு மதிப்பு

பரம்பரை பரம்பரையாகப் பேசி வரும் ஒழுங்குக்கு மரபு என்று பெயர். மரபை ஒட்டிப் பேசினுல்தான் மொழிக்கு மதிப்பைத் தருவதாகக் கருதப்படும்.

ஆடு மேய்ப்பவனை ஆட்டிடையன் என்றுதான் கூறவேண்டும். ஆட்டுப் பாகன் என்று கூறக்கூடாது. அது போலவே யானையை அடக்கி ஆள்பவனை ஆனை இடையன் என்று சொல்லுதல் கூடாது. ஆனைப் பாகன் என்று அழைப்பதுதான் அழகு.

இதை நினைவில் கொண்டு கீழே காண்பனவற்றை மரபு ஒட்டிய சொற்களாக எழுதிக் காட்டவேண்டும். முயற்சி செய்யுங்கள்.

(1) குதிரைக் கன்று
(2) பசுக்குட்டி
(3) ஆட்டுச் சாணம்
(4) பனை இலை
(5) மாங்குரும்பை
(6) குருவிக் குட்டி
(7) கீரிக்குஞ்சு
(8) மான்குட்டி
(9) மாட்டுக் கூட்டம்.
(10) குதிரைத்தொழுவம்

## 17. பொருத்தமான ஒலியைக் கூறுக.

ஆடு—பிளிறும்

யானை—கர்ஜிக்கும்

சிங்கம்—கத்தும்

நரி—உறுமும்

புலி—ஊளையிடும்

குதிரை—அலறும்

ஆந்தை—கனைக்கும்

மயில்—கூவும்

குயில்—அகவும்

நாய்—கரையும்

காக்கை—குரைக்கும்

மாடு கத்தும்; மனிதன் பேசுவான். இது போலவே மேலே காணும் உயிர்ப் பொருள் களின் ஒலியை ஒழுங்குப் படுத்திக் கூற வேண்டும். எங்கே, முயன்று பாருங்கள்.

## 18. இவர்களின் தொழில் என்ன ?

எழுத்தாளர்—வாதாடுகிறுர்

ஓவியர்—செதுக்குகிறுர்

சிற்பி—வரைகிறுர்

பாடகர்—இயற்றுகிறுர்

கவிஞர்—பாடுகிறுர்

வக்கீல்—எழுதுகிறுர்

குயவர்—கட்டுகிறுர்

கொத்தனுர் –வனைகிறுர்




ஒவ்வொரு தொழிலாளியின் தொழிலுக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. அவரவர் தொழிலுக்கு ஏற்ற வினைச் சொற்களைத் தேர்ந்தெடுத்துத் தொழிலாளியின் பெயருக்கு நேராகப் பொருத்திக் காட்டவேண்டும். முயற்சி செய்யுங்கள்.

## 19. தன்வினையும் பிறவினையும்

'தன்வினை' என்பது தானே செய்யும் வினை.

'பிறவினை' என்பது பிறபொருளால் செய்யும் வினை.

இராமன் படித்தான் – தன்வினை

இராமனைப் படிப்பித்தான் – பிறவினை

இதுபோல, கீழே காணும் தன்வினைச் சொற்களைப் பிறவினைச் சொற்களாக மாற்றி எழுதுங்கள் பார்க்கலாம்.

| | |
|---|---|
| நட | அடங்கு |
| தா | முழங்கு |
| புகு | திரும்பு |
| ஆடு | பயில் |
| பாடு | உருகு |
| எழுது | அகல் |
| பூண் | வருந்து |
| காண் | ஆறு |
| சுழல் | மாறு |
| பொருந்து | தமிழ் |

# 20. சரியரன வாக்கியங்கள் வேண்டும்

அமக்களப் படுத்தினுன்.
இளமையில் படிக்க வேண்டும்.
எல்கைக் கோட்டைத் தாண்டி விட்டான்.
ஐநூறு வீரர்கள் மாண்டனர்.
சமயல் நன்ருக இருந்தது.
துருநீரு பூசிக்கொண்டு கோயிலுக்குப் போனுன்.
காலையில் பழய கஞ்சி சாப்பிட்டேன்.
மளிகைக் கடையில் பயிறு வாங்கி வந்தான்.
இராமன் புட்டைப் பகிர்ந்து சாப்பிட்டான்.
சாப்பிட்டவுடன் வயிறு வலிக்குதென்ருன்.
கடேசியில் தேனீர் சாப்பிட்டோம்.

இந்த வாக்கியங்களை நாம் அடிக்கடி படித்தும், கேட்டும், பேசியும் வருகின்ருேம். இவை பிழைபபட்ட வாக்கியங்கள் என்று அறிஞர்கள் கூறுகிருர்கள். நீங்கள் ‘ஆம்,’ என்று ஒப்புக் கொண்டால், சரியான வார்த்தைகளைக் கண்டு பிடித்து எழுதிக் காட்டுங்கள், பார்க்கலாம்?

## 21. உரையாசிரியர்கள் யார்?

தொல்காப்பியம் என்ற நூலுக்குப் பண்டைய நாளில் உரைகண்ட ஆசிரியர்கள் யார்?

திருக்குறளுக்குப் பண்டைய நாளில் உரைகண்ட ஆசிரியர்கள் யார்?

## 22. எழுதியவர் யார் ?

கீழே காணும் இலக்கண நூல்களை எழுதிய ஆசிரியர்களின் பெயர்களைக் கூறமுடியுமா, என்று முயற்சி செய்து பாருங்கள். எப்போது எழுதப்பட்டன என்ற விபரமும் தெரிந்தால் சொல்லுங்கள்.

1. இறையனார் களவியல்
2. தமிழ் நெறி விளக்கம்.
3. யாப்பருங்கலம்
4. அகப்பொருள் விளக்கம்
5. களவியற் காரிகை
6. பன்னிரு பாட்டியல்
7. நவநீதப் பாட்டியல்
8. வரையறுத்த பாட்டியல்
9. சிதம்பரப் பாட்டியல்
10. மாறன் அலங்காரம்
11. பிரயோக விவேகம்

12. இலக்கண விளக்கம்
13. இலக்கணக் கொத்து
14. தொன்னூல் விளக்கம்
15. பிரபந்த தீபிகை
16. முத்து வீரியம்
17. சாமிநாதம்
18. சந்திரலோகம்
19. குவலயானந்தம்

## 23. உறுப்புகள் எவை?

மனிதனுக்குப் பல உறுப்புக்கள் உண்டு. கண், காது, கழுத்து முதலியன மனித உறுப்புக்களாகும். அதுபோலவே செய்யுளுக்கும் பல உறுப்புக்கள் உண்டு. அந்த உறுப்புக்கள் என்னவென்று உங்கட்குத் தெரியுமா ?

## 24. எத்தனை வகைப்படும்?

மனிதர்களை இரண்டு வகையாகப் பிரித்து ஆண், பெண் என்று இருவகைப் படுத்தினர் கற்ருேர். அதுபோலவே பாட்டுக்களை முன்ேனோர் கள் எத்தனை வகைப்படுத்தினர் என்பது தெரியுமா? அங்ஙனம் பிரிக்கப்பட்ட ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு ஓசை உண்டு. பாட்டுக்குரிய ஓசைகளை விரிவுடன் ஒழுங்கு படுத்திக் கூறுக.

## 25. சரியான பொருள் என்ன ?

| | |
|---|---|
| வாய்மை | செப்புதல் |
| உண்மை | விளம்புதல் |
| மெய்ம்மை | வற்புறுத்தல் |
| சொல்லுதல் | இயம்புதல் |
| பேசுதல் | கழறுதல் |
| பிதற்றுதல் | கூறுதல் |
| ஓதுதல் | சாற்றுதல் |
| உளறுதல் | பன்னுதல் |
| மொழிதல் | |

## 26. படிப்படியாகப் பெரிது பண்ணுக.

ஒன்று சிறியது. இரண்டு அதனினும் பெரியது. மூன்று அதைவிடப் பெரியது. நூறு இன்னும் பெரியது.

இதை நினைவில் கொண்டு கீழே காண்பனவற்றின் பெரியதைப் படிப்படியாக எழுதிக் காட்டுங்கள், பார்க்கலாம்.

1. சந்து

2. தூவானம்

# விடைகள்

## 1

### திருத்திய கடிதம்

அன்புடையீர்,

நான் நேற்று ஊர்வந்து சேர்ந்தேன். வரும் வழியில் நண்பர்கள் பலரைச் சந்தித்தேன்; மகிழ்ச்சியும் இன்பமும் ஏற்பட்டன. சென்ற இடங்கள் எல்லாம் திருக்குறளைப் பற்றியே பேசினேன். பெரியனவும் சிறியனவுமான சாமான்களைப் பலர் பரிசுப் பொருள்களாகத் தந்தனர். ஒரு கூட்டத்தில் முத்தொள்ளாயிரம் பற்றி ஒருத்தி நன்றாகப் பேசினாள்.

நாளை உங்களை நேரில் சந்திப்பேன்.

## 2

(1) ஞாயிறு தோறும் விடுமுறை

(2) பிரதி ஞாயிறு விடுமுறை

இவை சரியான சொற்றொடர்கள் ஆகும். பிரதி என்னும் சொல்வந்தால் தோறும் என்னும் சொல் தேவை இல்லை. தோறும் என்னும் சொல் வந்தால் பிரதி என்னும் சொல் தேவை இல்லை. ஏனென்றால் தோறும் என்பதற்கு ஒவ்வொரு என்பதுதான் பொருள்.

## 3

ஒவ்வொன்று

இவ்விரண்டு

மும்மூன்று

நந்நான்கு

ஐவைந்து

அவ்வாறு

எவ்வேழு

எவ்வெட்டு

ஒன்பதொன்பது

பப்பத்து

பப்பாதி

வெவ்வேறு.

## 4

என்னுடைய நாடு — என்னாடு

எம்முடைய நாடு — எந்நாடு

மூன்று நாள் — முந்நாள்

முந்திய நாள் — முன்னாள்

தன்னுடைய நலம் — தன்னலம்

தம்முடைய நலம் — தந்நலம்

என்னுடைய ஆள் — என்னாள்

எந்த நாள் — எந்நாள்

## 5

(1) மாணவர்கள் அறுபதிற்கு மேல் எட்டாம் வகுப்பில் படிக்கிறார்கள்.

(2) இராமனுக்கு ஒன்று அல்லது இரண்டு எதிரிகள் உண்டு. (ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவான வினைமுற்று, உண்டு என்பதாகும்).

(3) எங்கள் பள்ளிக்கூடம் கிழக்கே கோயிலாலும், மேற்கே வயல்களாலும், தெற்கே குளத்தாலும், வடக்கே தோப்புக்களாலும் சூழப்பட்டிருக்கிறது.

(4) வாக்காளர்களைப் பற்றியும், வாக்கெடுக்கும் முறைகளைப் பற்றியும் பேச்சாளர் எடுத்துக் கூறினார்.

(5) மூட்டைப் பூச்சிகளால் உண்டாகும் தொல்லைகளைச் சொல்வது முடியாது.

## 6

(1) நன்மைகள் உள.

(2) செய்திகள் வரா.

(3) விடுமுறைகள் இரா.

(4) சேவல்கள் கூவின.

(5) குயில்கள் கூவா.

## 7

(1) வீடுகள்

(2) தேனீக்கள்

(3) எழுத்துக்கள்

(4) சுவர்கள்

(5) தாயர்

(6) தந்தையர்

(7) மக்கள்

(8) மக்கள்

(9) யாவை

(10) தம்

(11) மற்றவை

(12) தோழர்

(13) அண்ணன்மார்

(14) பற்கள்

(15) சிறியன

(16) உடுக்கள்

## 8

(1) குலசேகரன் பட்டினம்

(2) கோயமுத்தூர்

(3) தஞ்சாவூர்

(4) சோழன்நாடு

(5) வீரவநல்லூர்

(6) காஞ்சிபுரம்

(7) கைலாயம்

(8) பூவாத்தங்குடி

(9) கரிவலம் வந்த நல்லூர்

(10) திருநெல்வேலி

(11) நாகபட்டினம்

(12) புதுச்சேரி

(13) மயிலாப்பூர்

(14) விருதுநகர்

(15) திருவாவடுதுறை

(16) கருந்தட்டாங்குடி.

## 9

கல் + தூண்

கல் + நெஞ்சம்

முள் + தாள்

தெள் + நீர்

புல் + நுனி

பொன் + குடம்

மண் + தலம்

எள் + நெய்

மண் + சட்டி.

## 10

நான் வகுப்பின் வலப்பக்கம் இருந்தேன். எனக்கு இடப்பக்கத்தில் இராமன் இருந்தான். அவன் சுவரில் கிறுக்கிக் கொண்டிருந்தான். அது அருவருப்பைத் தந்தது. எல்லாரும் அவனைப் பார்த்துச் சிரித்தனர். சிரிக்கத் தொடங்கியதும் அவன் நிரம்ப வெட்கப்பட்டான். முகத்தில் வழிந்த எண்ணெயைத் துடைத்துக்கொண்டு வெயிலில் பதற்றத்துடன் வீட்டுக்கு ஓடிவிட்டான்.

## 11

ஆடு, ஆனை, ஆமை

ஆகாரம் என்றால் 'ஆ' என்னும் எழுத்து. டு என்ற எழுத்துடன் ஆகாரம் சேர்ந்தால் ஆடு என்னும் உயிர்ப் பொருள் கிடைக்கிறது. அது போலவே ஆனை என்பதும்; ஆமை என்பதுவும்.

## 12

இராமனும் நாயும் வந்தார்கள்.

கோமதியும் கோழியும் வந்தார்கள்.

கண்ணனும் காளையும் வந்தார்கள்.

முயலும் ஆமையும் வந்தன.

## 13

(1) தொல்காப்பியம் —தொல்காப்பியர்

(2) புறப்பொருள் வெண்பா மாலை —ஐயனாரிதன்

(3) தண்டி அலங்காரம் —தண்டி

(4) நேமிநாதம் —குணவீரபண்டிதர்

(5) யாப்பருங் கலக்காரிகை —அமிதசாகரர்

(6) வீரசோழியம் —புத்தமித்திரன்

(7) நன்னூல் —பவணந்தி

(8) சிதம்பரச் செய்யுட் கோவை —குமரகுருபரர்.

## 14

தொண்டு,

(தொண்டு என்ருல் ஒன்பது என்று பொருள். சங்க இலக்கியங்களில் இச்சொல்லின் ஆட்சியை அறியலாம்.)

## 15

(1) சீமாட்டி

(2) கொழுந்தி

(3) கன்னுத்தி

(4) கரியள்

(5) கண்ணி

(6) பெண்டிர்

(7) அத்தை

(8) அமைச்சி

(9) இந்திராணி

(10) உழத்தி
(11) ஒருத்தி
(12) கணக்கச்சி
(13) மனைவி
(14) செட்டிச்சி
(15) செவிடு
(16) சிவை

## 16

(1) குதிரைக்குட்டி
(2) பசுக்கன்று
(3) ஆட்டுப் பிழுக்கை
(4) பனை ஓலை
(5) மாம்பிஞ்சு
(6) குருவிக்குஞ்சு
(7) கீரிப்பிள்ளை
(8) மான் கன்று
(9) மாட்டு மந்தை
(10) குதிரை லாயம்.

## 17

ஆடு கத்தும்
யானை பிளிறும்
சிங்கம் கர்ஜிக்கும்
நரி ஊளையிடும்
புலி உறுமும்

குதிரை கனைக்கும்
ஆந்தை அலறும்
மயில் அகவும்
குயில் கூவும்
நாய் குரைக்கும்
காக்கை கரையும்.

## 18

எழுத்தாளர் எழுதுகிறார்
ஓவியர் வரைகிறார்
சிற்பி செதுக்குகிறார்
பாடகர் பாடுகிறார்
கவிஞர் இயற்றுகிறார்
வக்கீல் வாதாடுகிறார்
குயவர் வனைகிறார்
கொத்தனார் கட்டுகிறார்.

## 19

| | |
|---|---|
| நடப்பி | அடக்கு |
| தருவி | முழக்கு |
| புகுத்து | திருப்பு |
| ஆட்டு | பயிற்று |
| பாடுவி | உருக்கு |
| எழுதுவி | அகற்று |
| பூட்டு | வருத்து |
| காட்டு | ஆற்று |
| சுழற்று | மாற்று |
| பொருத்து | தாழ்த்து |

## 20

அமர்க்களப் படுத்தினான்
இளமையில் படிக்க வேண்டும்
எல்லைக் கோட்டைத் தாண்டிவிட்டான்
ஐந்நூறு வீரர்கள் மாண்டனர்
சமையல் நன்றாக இருந்தது
திருநீறு பூசிக்கொண்டு கோயிலுக்குப் போனான்
காலையில் பழைய கஞ்சி குடித்தேன்
மளிகைக் கடையில் பயறு வாங்கிவந்தான்
ராமன் பிட்டைப் பகிர்ந்து சாப்பிட்டான்
சாப்பிட்டவுடன் வயிறு வலிக்குதென்றான்
கடைசியில் தேநீர் குடித்தோம்.

## 21

தொல்காப்பிய உரை ஆசிரியர்கள்.

1. இளம் பூரணர்
2. பேராசிரியர்
3. சேனாவரையர்
4. நச்சினார்க்கினியர்
5. தெய்வச் சிலையார்
6. கல்லாடர்

திருக்குறள் உரை ஆசிரியர்கள்.

| | | |
|---|---|---|
| 1. தருமர் | 2. மணக்குடவர் | 3. தாமத்தர் |
| 4. நச்சர் | 5. பரிமேலழர் | 6. பரிதியார் |
| 7. திருமலையர் | 8. மல்லர் | 9. கவிப்பெருமாள் |
| 10. காளிங்கர் | | |

'தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பரிதி—திருமலையர்
மல்லர் கவிப் பெருமாள் காளிங்கர் வள்ளுவர் நூற்
கெல்லை யுரையெழுதி னோர்,' என்பது பழம் பாடல்.

## 22

| ஆசிரியர் பெயர். | காலம். |
|---|---|
| 1 இறையனார் | கி.மு. முதல் அல்லது கி.பி. முதல் நூற்றாண்டு |
| 2 பெயர் தெரியவில்லை | கி.பி. 12ஆம் நூற்றாண்டு |
| 3 அமிதசாகரர் | கி.பி. 10ஆம் நூற்றாண்டு |
| 4 நாற்கவிராசநம்பி | கி.பி. 12ஆம் நூற்றாண்டு |
| 5 பெயர் தெரியவில்லை | கி.பி. 13ஆம் நூற்றாண்டு |
| 6 ஆசிரியர்கள் பலர் | கி.பி. 12ஆம் நூற்றாண்டு |
| 7 நவநீத நடனார் | கி.பி. 14ஆம் நூற்றாண்டு |
| 8 பெயர் தெரியவில்லை | காலம் தெரியவில்லை |
| 9 பரஞ்சோதியார் | கி.பி. 16ஆம் நூற்றாண்டு |
| 10 திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | கி.பி. 16ஆம் நூற்றாண்டு |
| 11 சுப்பிரமணிய தேசிகர் | கி.பி. 17ஆம் நூற்றாண்டு |
| 12 வைத்தியநாத தேசிகர் | கி.பி. 17ஆம் நூற்றாண்டு |

| | | |
|---|---|---|
| 13 | சாமிநாத தேசிகர் | கி.பி. 17ஆம் நூற்றாண்டு |
| 14 | வீரமா முனிவர் | கி.பி. 18ஆம் நூற்றாண்டு |
| 15 | முத்துவேங்கட சுப்பையர் | கி.பி. 19ஆம் நூற்றாண்டு |
| 16 | முத்துவீர உபாத்தியாயர் | கி.பி. 19ஆம் நூற்றாண்டு |
| 17 | சாமி கவிராசர் | கி.பி. 19ஆம் நூற்றாண்டு |
| 18 | விசாகப் பெருமாளையர் | கி.பி. 19ஆம் நூற்றாண்டு |
| 19 | மாணிக்கவாசகர். | கி.பி. 19ஆம் நூற்றாண்டு |

## 23

செய்யுளின் உறுப்புகள் அறுவகைப்படும். அவை யாவன:

1. எழுத்து
2. அசை
3. சீர்
4. தளை
5. அடி
6. தொடை

(எழுத்து அசை சீர் தளை அடி தொடை ஆறும் செய்யுள் உறுப்பெனச் செப்பினர் புலவர்)

## 24

பாட்டைப் பண்டையிலே நான்கு வகையாகப் பிரித்துக் கூறினர். அவை (1) வெண்பா (2) ஆசிரியப்பா (3) கலிப்பா (4) வஞ்சிப்பா.

வெண்பாவுக்குச் செப்பலோசை
ஆசிரியப்பாவுக்கு அகவலோசை
கலிப்பாவுக்குத் துள்ளலோசை
வஞ்சிப்பாவுக்குத் தூங்கலோசை

செப்பல் ஓசை என்பது இருவர் உரையாடுதல் போன்றே ஓசை.

அகவல் ஓசை என்பது ஒருவர் பேசுதல் போன்ற ஓசை.

துள்ளல் ஓசை என்பது கன்றுக்குட்டி துள்ளுதல் போன்று சீர்தோறும் துள்ளிவரும் ஓசை.

தூங்கல் ஓசை என்பது சீர்தோறும் துள்ளாமல் தூங்கிவரும் ஓசை.

## 25

வாயால் பொய் பேசாதிருத்தல் வாய்மை
உள்ளத்தால் பொய் நினையாதிருத்தல் உண்மை
உடலால் பொய் செய்யாதிருத்தல் மெய்ம்மை.
சுருக்கமாகக் கூறுதல்—சொல்லுதல்
நீண்டநேரம் உரையாடுதல்—பேசுதல்
கிறுக்கனைப் போலக் கத்துதல்—பிதற்றுதல்
காதுகளில் மெதுவாகச் சொல்லுதல்—ஓதுதல்
ஒன்றுக் கொன்று தொடர்பின்றிப் பேசுதல்—உளறுதல்
அழகாகப் பேசுதல்—மொழிதல்
கேட்ட கேள்விக்குப் பதில் தருதல்—செப்புதல்
பலர் அறிய விளக்கமாகச் சொல்லுதல்—விளம்புதல்
அழுத்தமாகக் கூறுதல்—வற்புறுத்தல்

இனிமையாகப் பேசுதல்—இயம்புதல்

கடுமையாகப் பேசுதல்—கழறுதல்

கூறு படுத்திச் சொல்லுதல்—கூறுதல்

பலர் அறியும்படி வெளிப்படையாகப்
பேசுதல்—சாற்றுதல்

திரும்பத் திரும்பச் சொன்னதையே
சொல்லுதல்—பின்னுதல்



## 26

(1) சந்து
தெரு
வீதி
சாலை
நெடுஞ்சாலை

(2) தூவானம்
தூறல்
சாரல்
மழை
பெருமழை
மாரி.
மாமாரி.

